20th January 1961]

SRI V. SUBBIAH : இந்த ராஜ்யத்தில் நீண்ட இழைகள் உள்ள கதிர்கள் உற்பத்தியாகும் இடத்தில் இப்பேர்பட்ட மில்கள் ஏதாவது வைக்க அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கோவில்பட்டியிலும் மில் இருக்கிறது. அந்தப் பகுதியில் அதிகம் இருக்கிறது. ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒரு கூட்டுறவு மில் இருக்கிறது, ராஜபாளையத்திலும் இருக்கிறது.

SRI T. KARIA GOUNDER : கனம் சபாநாயகர் அவர்களே, வந்தவாசியில் ஒரு நூற்பு ஆலை ஆரம்பிக்கப்போவதாக செய்தி பத்திரிகையில் வெளிவந்தது சர்க்காருக்குத் தெரியுமா ? அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI R. VENKATARAMAN : என்னுடைய பதிலில் " These proposals are tentative " என்று சொன்னேன். எந்த இடத்தில் அமைக்கப்படும் என்று இன்னும் சொல்லப்படவில்லை. பல இடங்களிலிருந்தும் மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன.

SRI A. GOVINDASAMY : இதற்கான மனுக்கள் எந்தெந்த இடங்களிலிருந்து வந்திருக்கின்றன? தனியார் துறையில் ஆரம்பிக்கப்படவிருப்பதையும் சேர்த்து கணக்கிட்டுத்தான் சர்க்கார் இந்த விபரங்களை கொடுக்கிறார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் துறையில் டெக்ஸ்டைல் மில் ஆரம்பிக்கவேண்டும் என்ற உத்தேசம் இப்போது கிடையாது. இந்த மில்களை எல்லாம் கூட்டுறவு முறையிலும் தனியார் துறையிலும் ஆரம்பிப்பதாகத்தான் இருக்கிறது. இது எந்த மாவட்டத்தில் ஆரம்பிக்கப்படும் என்று இப்போது சொல்வதற்கில்லை.

SRI A. MARIAPPAN : சேலம் மாவட்டத்தில் கைத்தறியாளர்கள் அதிகமாக இருப்பதினால் சேலம் ஜில்லாவுக்கு அதிகப்படியான ஸ்பின்டில்களை ஒதுக்குவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்காகத்தான் கூட்டுறவு முறையில் ஒரு மில் சேலம் ஜில்லாவில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

*Rural Industrial Estates*

* 33 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் கிராமிய தொழில் பள்ளிகள் ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) இப்படியானால் வட ஆற்காடு மாவட்டத்தில் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கப்படும் ?

The Hon. Sri R. VENKATARAMAN : (அ) & (இ) During the Third Five-Year Plan, the Government propose to establish worksheds in places with a population up to five thousand and Industrial Estates in places with a population above that limit. During 1961–62, it is proposed to start an Industrial Estate at Arkonam in the North Arcot district.

*Arkonam-Erode railway line*

* 34 *Q.*—Sri P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அரக்கோணத்திலிருந்து ஈரோடு வரைக்கும் ரயில்வே இரட்டைப் பாதைகள் அமைக்கப்படும் திட்டத்தை சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரியப்படுத்தியிருக்கிறார்களா ?

(இ) அப்படியானால், எடுக்கப்பட்டுவரும் நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The State Government have not sent any proposal for the doubling of the railway track. The Railway Administration has taken up under the Second Five-Year Plan, the doubling of certain sections between Arkonam and Erode aggregating to 89 miles. Out of the 89 miles a length of 35·17 miles has been doubled and opened for traffic. 26·50 miles of doubling work is still in progress and the proposal is still under review of the Railway Administration in respect of the remaining 27 miles.

Sri P. G. MANICKAM : ஸார், இதுவரை பூர்த்தி செய்யாத 25 மைல்களையும் இன்னும் எவ்வளவு காலத்திற்குள் பூர்த்தி செய்து கொடுப்பதாக ரயில்வே இலாகா உத்தேசித்திருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இதற்கான வேலை நடந்து கொண்டுதான் இருக்கிறது. சீக்கிரத்தில் பூர்த்தியாகிவிடும்.

Sri P. G. MANICKAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ? இதில் எவ்வளவு செலவு செய்யப்பட்டதாக கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : தொகை விவரம் என்னிடமில்லை. மைல் விவரம்தான் என்னிடமிருக்கிறது.

*National Cadet Corps*

* 35 *Q.*—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government of India have recommended to the Government to stop recruitment to National Cadet Corps?